ஸ்ரீ

அழகியமணவாளதாசர் 

என்கிற திவ்வியகவி

பிள்ளைப்பெருமாள்ஐயங்கார்

அருளிச்செய்த

திருமாலிருஞ்சோலைமலை

# அழகரந்தாதி

மூலபாடம்.

௫-ம் பதிப்பு.




இஃது

ஊ - புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.

1890.

ஸ்ரீராமஜயம்.

## திருமாலிருஞ்சோலைமலை

# அழகரந்தாதி.

### தனியன்.

திருகவிமங்கைமணவாளவள்ளல்செந்தேன்றுளித்து
முருகவிழ்தென்றிருமாலிருஞ்சோலைமலைமுகுந்தற்
கிருகவின்றுள்களிற்கூடுமந்தாதியினீரைம்பதில்
ஒருகவிகற்கினுஞானமும்வீடுமுதவிடுமே.

### காப்பு.

அங்கத்தமிழ்மறையாயிரம்பாடியளித்துலகோர்
தங்கட்குவீடருளும்புருடோத்தமன்றன்வகுளத்
தொங்கற்பராங்குசன்றாளிணைமாலிருஞ்சோலைமலைச்
சங்கத்தழகரந்தாதிநடாத்தத்தலைக்கொள்வனே.

### நூல்.

நீராழிவண்ணனைப்பாலாழிநாதனைநின்மலனைச்
சீராழியங்கைத்திருமகள்கேள்வனைத்தெய்வப்புள்ளூர்
கூராழிமாயனைமாலலங்காரனைக்கொற்றவெய்யோன்
ஓராழித்தேர்மறைத்தானையெஞ்ஞான்றுமுனைநெஞ்சமே (௧)

உனைமாற்றமுண்டென்பொறியைந்துமுன்னிடத் தன்றியுன்னு
இனைமாற்றவேண்டுமிதுவேயென்விண்ணப்பமென்னப்பனே[ம்
உனைமாற்றளவற்றபொன்னுடுத்தாய்வில்லெடுத்திலங்கை
வனைமாற்றலனைச்செற்றாயழகாகருமாணிக்கமே. (௨)

மாணிக்கனகம்புனைமேனிமாலுக்குவார்சடையோன்
பாணிக்கனகம்பலியொழித்தானுக்குப்பச்சைத்துழாய்
ஆணிக்கனகமுடியலங்காரனுக்கண்டமெல்லாம்
பேணிக்கனகனுக்குப்பித்தரானவர்பித்தரன்றே. (௩)

பித்தரும்பாகின்றநெஞ்சனைவஞ்சனைப்பேருலகோர்
கைத்தரும்பாவியெனுங்கடையேனைக்கடைக்கணியாய்

முத்தரும்பாருந்தொழுமழகாவன்றொசுந்துழாய்ப்
புத்தரும்பார்முடியாயடியாரைப்புரப்பவனே. (௪)

புரந்தரனுமெனப்பூபதியாகிப்புகர்முகமாத்
துரந்தரசாரியென்னல்குரவாகியென்றால்புவிக்கு
வரந்தரமாலிருஞ்சோலைநின்றார்க்கென்மனத்தினுள்ளே
நிரந்தரமாயலங்காரர்க்கிங்காட்பட்டுநின்றபின்னே. (௫)

நின்றபிரானன்கழலுமுன்னேநெஞ்சமேநினையாய்
சென்றபிராயம்வம்பேசென்றதாற்றிருமங்கைகொங்கை
துன்றபிராமனைச்சுந்தரத்தோளனைத்தோளின்மல்லைக்
கொன்றபிரானையடைந்தடியாரொடுங்கூடுகைக்கே. (௬)

கூடுகைக்குஞ்சரமத்தடியேற்குக்கொடியுவஞ்சம்
சாடுகைக்குஞ்சரணந்தரவேண்டுந்தடத்தழுந்தி
வாடுகைக்குஞ்சரங்காத்தீர்விண்வாழ்கைக்கும்வாளரக்கர்
வீடுகைக்குஞ்சரங்கோத்தீர்விடைவெற்பின்வித்தகரே. (௭)

வித்தகரும்பர்க்கரசானவனும்விதியுங்கங்கை
மத்தகரும்பரவும்மலங்காரர்மழைகொண்டகார்
ஒத்தகரும்பரஞ்சோதியர்நாமமுரைத்தன்னைமீர்
இத்தகரும்பரதெய்வமுங்கூத்தும்விட்டேத்துமினே. (௮)

ஏத்துமின்பத்தினிலெட்டெழுத்துமிணையடிக்கே
சாத்துமின்பத்திரத்தண்ணந்துழாய்மதிதாங்கிக்கஞ்சம்
பூத்துமின்பத்திசெயும்பச்சைமாமுகில்போலழகர்
காத்துமின்பத்திலிருத்தியும்வைப்பர்கருணைசெய்தே. (௯)

செய்தவராகவருந்தியுந்தீர்த்தத்துறைபடிந்தும்
கைதவராகமங்கற்றுமென்னுங்கடற்பார்மருப்பிற்
பெய்தவராகனைமாலலங்காரனைப்பேரிலங்கை
எய்தவராகவவென்றேத்தநீங்குமிருவினையே. (௧௦)

வினைக்குமருந்தரிக்கும்பிணிமூப்புக்கும்விகின்றவே
தனைக்குமருந்தன்னதாளழகாசெய்யதாமணாயங்
கனைக்குமருந்தமுதேயருளாய்நின்னைக்காதலித்து
நினைக்குமருந்ததிதன்னுயிர்வாழ்க்கைநிலைபெறவே. (கக)

நிலையாமையானவுடலுமுயிருநினைவுந்தம்மிற்
கலையாமையானங்கலக்குமுன்னேகங்கைவைத்தசடைத்
தலையாமையானன்றுமணாயான்றொழுந்தாளழகன்
அலையாமையானவன்மாலிருஞ்சோலையடைநெஞ்சமே. (கஉ)

நெஞ்சமுருக்குமுயிருருக்குந்தொல்லைநீள்வினையின்
வஞ்சமுருக்கும்பவமுருக்கும்வண்டுழாயழகர்
கஞ்சமுருக்குமலர்வாய்த்திருநண்பர்கஞ்சனுக்கு
நஞ்சமுருக்கும்வளையாழியன்னவர்நாமங்களே. (கங)

நாமங்களாவிநழுவுந்தனையுநவின்றவரைத்
தாமங்களாவிமனத்துள்வைப்பார்தண்டலையினகில்
தூமங்களாவிமணநாறுமாலிருஞ்சோலையன்பர்
சேமங்களாவின்கனியனையார்பதஞ்சேருவரே. (கச)

சேராதகாதநரகேழ்தலைமுறைசேர்ந்தவர்க்கும்
வாராதகாதம்வசைபிணிபாவமறிகடன்முன்
தூராதகாதங்கடேர்த்தானைமாலிருஞ்சோலையிற்போய்
ஆராதகாதலுடன்பணிவீரென்னழகனையே (கரு)

அழக்கன்றியகருங்கண்ணிக்குக்கண்ணியளித்திலரேல்
வழக்கன்றிமுன்கொண்டவால்வளைகேளுமறுத்ததுண்டேல்
குழக்கன்றின்பின்குழலூதலங்காரர்க்குக்கோதைநல்லீர்
சழக்கன்றில்வாய்பிளந்தானுய்யலாமென்றுசாற்றுமினே. (கசு)

சாற்றுக்கரும்பனைக்கூற்றென்னுமாசைத்தமிழ்மலயக்
காற்றுக்கரும்பனையுங்கண்படாளலங்காரற்கண்டார்

எற்றுக்கரும்பனையக்கொங்கையாள்கொண்டவின்னலுக்கு
மாற்றுக்கரும்பனையல்லாதுவேறுமருந்தில்லையே. (௧௭)

மருந்துவந்தார்தொழுமாலிருஞ்சோலைமலையழகர்
அருந்துவந்தாரணியென்றயின்றாரடலாயிரவாய்ப்
பொருந்துவந்தார்பணிப்பாயார்விதரன்புதமனையில்
விருந்துவந்தாரடியார்க்கில்லைநோயும்வெறுமையுமே. (௧௮)

வெறுத்தவனைக்கஞ்சனைச்செற்றுளார்விடைவெற்பர்வெங்கள்
கறுத்தவனைக்கஞ்சலென்றுவந்தார்கனகாம்பரத்தைப்
பொறுத்தவனைக்கஞ்சனமேனிக்காவிபுலர்ந்துருகிச்
சிறுத்தவனைக்கஞ்சங்கூப்புமென்பேதைக்கென்செப்புவதே. ()

செப்போதனஞ்செழுந்துப்போசெவ்வாயென்று சேயிழையார்க்
கொப்போதனஞ்சுருகித்திரிவீர்கனலூதைமன்வின்
அப்போதனமென்றமுதுசெய்தாரலங்காரர்பொற்றுள்
எப்போதனந்தறவிர்ந்தேத்தநீங்களிருக்கின்றதே. (௨0)

இருக்கந்தரத்தனைவோர்களுமோதியிடபகிரி
செருக்கந்தரத்தனையேத்தநின்றானைசிறத்ததுப்பின்
உருக்கந்தரத்தனைத்தும்பொழித்தானையுலகமுண்ட
திருக்கந்தரத்தனையல்லாதெண்ணேனொருதெய்வத்தையே. ()

தெய்வம்பலவவர்நூலும்பலவவைதேர்பொழுதில்
பொய்வம்பலவென்றுதோன்றும்புல்லோர்கட்குப்போதநல்
உய்வம்பலனுமவனேயென்றோதியுணர்வர்நெஞ்சே [லோர்
கொய்வம்பலர்சொரியுஞ்சோலைமாமலைக்கொண்டலையே. ()

கொண்டலையாநிற்குமைம்புலக்கோண்மகரங்களினீர்ப்
புண்டலையார்பிறவிக்கடன்மூழ்குவருத்தமனைத்
தண்டலையார்திருமாலிருஞ்சோலைத்தனிச்சுடரைப்
புண்டலையால்வணங்காரனங்கார்வினைபோகவென்றே. (௨௩)

என்றுதரங்கலந்தேனற்றையின்றுதொட்டிற்றைவனை
நின்றுதரங்கிக்கின்றேற்கருள்வாய்நெடுங்கான்கடந்து
சென்றுதரங்கக்கடறூர்த்திலங்கையிற்றீயவனைக்
கொன்றுதரங்குவித்தாய்சோலைமாமலைக்கோவலனே. (௨௪)

கோவலன்பார்ப்புடன்கேகயஞ்சூழ்குளிர்சோலைமலைக்
காவலன்பாற்கடற்கண்டுயின்மாலலங்காரனென்றே
பாவலன்பாற்பணிவாரணிவானவராகிமறை
நாவலன்பார்ப்பதிநாதனண்ணுப்பதநண்ணுவரோ. (௨௫)

நண்ணினனுகமுடிமேனடித்தென்னைநாசமறப்
பண்ணினனுகமும்பாருமளந்தனபண்டுதம்பி
மண்ணினனுகவனம்போயினவளர்சோலைமலைக்
கண்ணினனுகங்கரியான்சிவந்தகழலிணையே. (௨௬)

கழலப்புகுந்தவினையறியாரென்கருத்தறியார்
அழலப்புகன்றெருறுப்பாரன்னைமாரறுகாற்சுரும்பு
சுழலப்புனைந்ததுழாய்மார்பர்மாலிருஞ்சோலையென்னூர்
தழலப்புவனென்றனங்களிலேசந்தனங்களென்றே. (௨௭)

தனத்துக்கராவியவேல்விழிக்கேக்கற்றுத்தையலரால்
இனத்துக்கராகித்திரிவார்பலர்சிலர்செங்கமல
வனத்துக்கராசலங்காத்தார்க்குச்சோலைமலையினின்ற
கனத்துக்கரவணையாற்கெம்பிராற்குள்ளங்காதலரே. (௨௮)

காதலைப்பத்தினிமேல்வைத்தநீசக்கருநிருதன் [ர்க்
மாதலைப்பத்தியைமண்ணிலிட்டாய்நின்னைவாழ்த்தித்தொண்ட
ஈதலைப்பத்தியைச்செய்வோர்கள்வாழுமிடபவெற்பா
நீதலைப்பத்தியங்கித்திரிவேற்கருள்செய்தருளே. (௨௯)

அருடருமங்கைவிடாதேத்துமன்பருக்கன்பவொல்லில்
இருடருமங்கையெறியாழியாரிசைக்கின்னரரும்

பெருடருமங்கையரும்வாழிடபகிரியிற்கல்லா
மருடருமங்கையலெய்திலன்றேயவர்முத்தரன்றே. (௩௦)

முத்தரன்றேநின்கழலொருகாற்கைமுகிழ்க்கப்பெற்றோர்
பித்தரன்றேநினைக்கேபித்தராகிற்பிரமன்கங்கை
வைத்தரன்றேய்துயர்தீர்த்தாய்நின்சோலைமலைமருவும்
பத்தரன்றேபரிவாலென்னையாளும்பரமர்களே. (௩௧)

பரந்தாமனைத்திருமாலிருஞ்சோலைப்பரமனைக்கால்
கரந்தாமரையன்னகார்நிறத்தானைக்கடல்கடக்கும்
சரந்தாமரைதிரியான்போயிலங்கைத்தலைவன்பத்துச்
சிரந்தாமரைக்கணைத்தெய்தானையெய்தற்குத்தேர்மனமே. ()

தேராயிரவுபகலினைதேடுவைதீமைநன்மை
பாராயிரங்குவைபாவையராற்பன்மோவலிபால்
சோராயிரந்தவனைத்திருமாலிருஞ்சோலைநின்ற
பேராயிரமுடையானைநெஞ்சேயென்றுபேணுவையே. (௩௩)

பேணிக்கவித்தவனைக்குடையாய்ப்பெரியோர்பதின்மர்
ஆணிக்கவித்தமிழ்மாலைகொண்டாயழகாகரிய
மாணிக்கவித்தகமாமலையேவல்லுளவுக்கல்லால்
பாணிக்கவித்தடங்காதவெங்காமப்படர்கனலே. (௩௪)

படராகுவால்லுவியக்குழலூதியபாலனையம்
அடராகுவாகனன்றுதைக்கிட்டாரலங்காரர்துழாய்க்
இடராகுவார்பலர்காண்டமியேனையெரிப்பதென்னி
விடராகுவாய்க்கொண்டெல்சுட்டுக்கான்றிட்டவெண்டிங்களே.

திங்களப்பாகின்றசெந்திக்கொழுந்திற்செழுஞ்சங்குபோ
லங்களப்பாவையுருகுவதோரிலரும்பரெல்லாம்
எங்களப்பாவெமைக்காவாயெனவுலகீரடியால்
அங்களப்பான்வளர்ந்தார்சோலைமாமலையாதிபரே. (௩௬)

ஆதியராவிற்றுயிலலங்காரரழகரன்பாம்
வேதியராவுதிவீற்றிருப்பாரண்டமீதிருக்கும்
சோதியராவின்பின்போந்தாரையன்றித்தொழேனுடலைக்
காதியராவினும்பொன்மாமகுடங்கவிக்கினுமே. (௩௭)

கவித்தானைமன்னற்குநட்பாய்முடிகவித்தானையன்று
புவித்தானைவற்றப்பொழிசரத்தானைப்பொருதிலங்கை
அவித்தானைமாலிருஞ்சோலையின்றானையழகனைமுன்
தவித்தானைவாவெனவந்தானைப்பற்றினென் றஞ்சமென்றே. ()

தஞ்சந்தனமென்றுதேடிப்புல்லோர்தையலார்கடைக்கண்
வஞ்சந்தனங்கொள்ளவாளாவிழப்பர்மதியுடையோர்
செஞ்சந்தனப்பொழின்மாலிருஞ்சோலைத்திருநெடுமால்
நெஞ்சந்தனக்குவப்பாகநல்காநிற்பர்நேர்படினே. (௩௯)

நேராயவேதனைநெஞ்சிடந்தாய்நெடுஞ்சோலைமலைக்
காராயவேதனைமுன்படைத்தாய்நின்கழற்குத்தொண்டென்
றாராயவேதனைப்புன்பிறப்போயுமவாவழியிற்
பேராயவேதனையில்லுழைப்போரும்பிழைப்பர்களே. (௪0)

பிழைத்தலையானென்ணிப்பேசுகின்றேனிப்பிணிமற்றொன்று
மழைத்தலைவார்குழலீர் தணியாதுவருணனைமுன் [ல்
அழைத்தலையங்கடைத்தாரலங்காரரலங்கனல்கிர்
முழைத்தலைநின்றுமலயானிலம்வந்துமோதுமுன்னே. (௪௧)

மோதாகவந்தனைமூட்டிலங்கேசன்முடிந்துவிண்ணின்
மீதாகவந்தனைவில்லெடுத்தேவிடைவெற்பினின்ற
நீதாகவந்தனைச்செற்றாயுனையன்றிநான்மறந்தும்
தீதாகவந்தனைசெய்யேன்புறஞ்சிலதேவரையே. (௪௨)

தேவரையாதன்மனிதரையாதல்செழுங்கவிதை
நாவரையாமனவிலுகிற்பீர்நம்மையாளுஞ்செம்பொன்

மேவாரையானையிருஞ்சோலைவேங்கடமெய்யமென்னும்
மாவரையானையொருவனையேசொல்லிவாழுமினே. (சங)

வாழுமின்பங்கயச்சுந்தரவல்லிமணாளன்வெற்பைச்
சூழுமின்பத்தித்தொல்வினைதீர்ந்துய்யத்தொங்கல்சுற்றும்
தாழுமின்பஞ்சணைமேன்மடவார்தடமாமுலைக்கே
வீழுமின்பங்கருதித்தன்பயோனியில்வீழ்பவரே. (சச)

வீழமராமரமெய்தார்மதிதவழ்வெற்பைநெஞ்சே
தாழமராடச்சமன்குறுகானிச்சரீரமென்னும்
பாழமராமற்பரகதியேற்றுவர்பார்க்கில்விண்ணோர்
வாழமராவதியுந்நரகாமந்தமாநகர்க்கே. (சரு)

நகராமுறுநடம்புரந்தவர்நன்னைலரால்வனமும்
சிகராமுறுடுஞ்சிறுமைகண்டோமஞ்ஞைநேதேனிசைகள்
பகராமுறுடும்பனிச்சோலைவெற்பினிற்பார்க்குக்கஞ்சன்
தகராமுறுடுகைத்தார்க்கதிந்தீர்கள்சரன்புகுமே. (சசு)

சரணியனுகத்தனைகிளைந்தாரைத்தன்போலவைக்கும்
அரணியனுகத்தனையானரங்கனழகனெங்கோன்
இரணியனுகமிடந்தான்கதையன்றியீனர்தங்கள்
முரணியனுகத்தும்புன்குரலோரிமுதுக்குரலே. (சஎ)

முதவிருந்தாவனத்தானிரைமேய்த்தவர்முன்விதுரன்
புதவிருந்தானவர்மாலலங்காரர்பொலங்கழலாம்
மதவிருந்தாமரைக்காளாயிரார்க்குமதிநுட்பறால்
எதவிருந்தாலுமதனுல்விடாவிங்கிருவினையே. (சஅ)

வினையாட்டியேன்கொண்டவெங்காமநோய்வெறியாட்டினுமிச்
சினையாட்டினுந்தணியாதன்னைமீர்செய்யபூங்கமல
மினையாட்டிநாயகன்மாலிருஞ்சோலைமலைச்சிலம்பாற்
றெனையாட்டிவாருஞ்சொன்னேனெந்தநோயுமெனக்கில்லையே.

எனக்காவியன்றுமுடலிக்குமாகியிருப்பதைச்சந்
தனக்காவியக்குந்தமரவண்டேர்சொல்லுந்தத்துவநூல்
கனக்காவியங்கவிவல்லோர்புகழலங்காரனுக்கு
வனக்காவியங்கண்ணிமாமலராண்மணவாளனுக்கே. (௫௦)

மணவாளராவிசிகர்திருமாதுக்குமாலழகர்
பணவாளராவிற்கண்பள்ளிகொள்வார்திருப்பாதமெண்ணக்
குணவாளராவிரின்றேயுயிர்காளும்மைக்கூற்றுவனார்
நினைவாளராவியறுக்குமப்போதுநினைப்பரிதே. (௫௧)

நினைப்பரியாயெளியாயும்பர்யார்க்குநின்னன்பருக்கும்
வினைப்பரியானவன்வாய்பிளந்தாய்வியன்சோலைமலை
தனைப்பரியாநின்றதாளழகாமுற்சனனத்துள்ளும்
உனைப்பரியாமலன்றேபரித்தேனிவ்வுடலத்தையே. (௫௨)

உடலம்புயங்கத்துரிபோல்விடுமென்றுவணப்புள்ளின்
அடலம்புயமிசைநீவரவேண்டுமையானனற்கும்
மடலம்புயற்கும்வரந்தருஞ்சோலைமலைக்கரசே
கடலம்புயர்வரையாலடைத்தாயென்னைக்காப்பதற்கே. (௫௩)

காப்பவனந்தமலரோனையுங்கறைக்கண்டனையும்
பூப்பவனந்தரம்போக்கவைப்பான்புனல்பார்விசும்பு
தீப்பவனந்தருந்தெய்வசிகாமணிச்சேவடியை
நாப்பவனந்தப்புகழ்வார்கொப்பில்லைநவகண்டத்தே. (௫௪)

கண்டாகனன்கண்ணனல்லாற்கதியின்மைகண்டடைந்த
துண்டாகனம்பவொட்டாதுங்களூழ்வினையுண்மையதிற்
தண்டாகனவண்ணனேயருளாயென்றழகனுக்கே
தொண்டாகநன்னெஞ்சினாலுரைப்பீர்பிறர்தொண்டர்களே. ()

தொண்டுபடார்திருமாலிருஞ்சோலையிற்சோதிக்கன்பு
கொண்டுபடாமலரிட்டிறைஞ்சார்மடக்கோதையரைக்

கண்டபடாமுலைதோயனுராகங்கருதியிரா
உண்டபடாநிற்கும்போதனைவாரொங்ஙனுய்வதுவே. (ருசு)

உய்வந்தொழும்புசெய்தென்றிருப்போமையுய்யாமலேவர்
பெய்வந்தொழுவினைக்கேயென்பராற்பெருந்தேன்சிகரம்
தைவந்தொழுகுமலையலங்காரசதுமுகத்துத்
தெய்வந்தொழுந்தெய்வமேயென்கொலோவுன்றிருவுளமே. ()

திருவிளையாடுநின்றோட்செங்கண்மால்பலதேவருடன்
மருவிளையான்றிருமாலிருஞ்சோலைமலையெனவோர்
உருவிளையாமற்பிறப்பார்பலர்புகழோதிச்சிலர்
கருவிளையாநிற்கவித்தாவர்முத்தியிற்காமமற்றே. (ருஅ)

காமத்தனைப்பொய்யழுக்காறுகோபங்களவுகொலை
யாமத்தனையுமுடையேனையாளுங்கோலான்பொருப்பாம்
தாமத்தனைவரும்போற்றநின்றுண்பண்டுதாமனாயோன்
பூமத்தனைச்செய்தநோய்துடைத்தானடிப்போதுகளே. (ருக)

போதகத்தாலும்வெண்போதகத்தாலும்புராந்தகனும்
நீதகத்தானதிர்தருங்காலைத்திருவனைசேர்
பீதகத்தாயழகாவருளாயென்பர்பின்னையென்ன
பாதகத்தான்மறந்தோதனிராயகம்பாவிப்பரோ. (சு0)

பாவிக்கமலவிரிஞ்சற்கிறையவர்பத்தர்தங்கள்
ஆவிக்கமலத்துவிற்றிருப்பாரளிப்பாடல்கொண்ட
வாவிக்கமலமணநாறுஞ்சோலைமலையைக்கண்ணுல்
சேவிக்கமலமறுமனமேயெழுசெல்லுதற்கே. (சுக)

செல்லுக்குவளைகுழனுட்டமென்றுதெரிவையர்பால்
பல்லுக்குவளைமுதுகாந்தனையும்புன்பாட்டுளைப்பீர்
அல்லுக்குவளையும்பாண்டிநாட்டையடைந்துநுங்கள்
சொல்லுக்குவளையுண்டார்க்கலங்காரர்க்குச்சூட்டுமினே. (சுஉ)

கூட்டோதிமஞ்சென்றுசொல்லாதென்காதலைத்தும்பியிசைப்
பாட்டோதிமங்கையரும்பணியார்பண்டுகன்மழைக்காக்
கோட்டோதிமமெடுத்தார்சோலைமாமலைக்கோவலனூர்
மாட்டோதிமஞ்சினங்காளுரைப்பீர்மறுவாசகமே. (௬௩)

வாசம்பரந்ததுழாயுமென்பாடலுமாலையொளி
வீசம்பரம்பசும்பொன்னுமென்வேட்கையும்வீற்றிருக்கும்
தேசம்பரமபதமுமென்சிந்தையுந்திவளியா
காசம்பரவைமண்கண்டுண்டமாலலங்காரனுக்கே. (௬௪)

அலங்காரன்சுந்தரத்தோளானழகனணிமுடியில்
இலங்காரனேறுதிருவுடையானெட்டெழுத்துங்கற்றார்
கலங்காரனங்கன்கணையாலெச்செல்வமுங்காதலியார்
மலங்காரருந்துயர்மேவினுமாகுவர்வானவரே. (௬௫)

வானவதாரணிசுந்தரத்தோளன்முன்மாவலியைத்
தானவதாரணிதாவென்றமாயன்றராதலத்து
மீனவதாரமுதலானவைவினையின்றியிச்சை
யானவதாரறிவாரவரோமுத்தராமவரே. (௬௬)

ஆமவனைப்பணித்தாள்வாரழகரயனுமையாள்
வாமவனைப்பணியான்பணிபாதத்தைவாழ்த்துங்கொங்கை
ஏமவனைப்பணிபூணுள்சந்தேந்திழையாளுரைத்தால்
வேமவனைப்பணியாதேயெனுமெங்கண்மெல்லியலே. (௬௭)

மெல்லியலைப்பரியங்கனையாரும்வெறுத்துவசை
சொல்லியலைப்பரியங்கவொட்டார்சுடர்மாமலையைப்
புல்லியலைப்பரியங்கத்திலேறும்புயல்பதின்மர்
நல்லியலைப்பரியக்கழற்றாமநயந்தபின்னே. (௬௮)

பின்னிறப்பும்பிறப்புநரைமூப்பும்பிணியுமனை
முன்னிறப்பும்பிரித்தானிருந்தானவர்மூதிலங்கை

மன்னிறப்புங்கக்கலைதொட்டசோலைமலையழகன்
பொன்னிறப்புண்டரிகத்திருத்தாளன்றிப்போற்றிலமே. (௬௯)

போற்றியிராமவென்னார்சோலைமாமலைபோதவிடார்
மாற்றியிராவைப்பகலாக்கிலார்வண்டுழாய்குழன்மேல்
ஏற்றியிராசதமாகவையாரென்விடலையெல்லாம்
மாற்றியிராரன்னைமாரென்னைவாய்வம்பளக்கின்றதே. (௭0)

அளப்பதுமங்கையினீரேற்பதுந்தளிப்பதும்பின்
பிளப்பதுமங்கையில்வெண்கோட்டிற்கொள்வதும்பேருணவாக்
இளப்பதுமங்கையெனத்தோள்புணர்வதுங்கேட்கில்வையம்
வளப்பதுமங்கையஞ்சேர்சோலைமாமலைமாதவரே. (௭௧)

மாதவராலும்பராலறியார்மதுரைப்பிறந்த
யாதவராலிலைமேற்றுயின்றாரிருந்தாழ்சுனையில்
போதவராலுகண்மாலிருஞ்சோலையிற்போம்பிறவித்
தீதவராலன்றியெத்தேவராலுந்தெறலரிதே. (௭௨)

அரியவரந்தயன்முதலோர்க்கருள்செய்தவரைப்
பெரியவரந்தமில்வாழ்வினராக்கித்தம்பேரருளால்
கரியவரந்தணர்கைதொழுமாலலங்காரர்வையத்
துரியவரந்தரங்கத்துயர்தீர்க்கவுலாவுவரே. (௭௩)

உலகுதிக்கும்படிசிந்தித்துத்தந்திவ்வுலகிலுறும்
நலகுதிக்கும்படிநின்றபிரானிடநானிலமும்
இலகுதிக்கும்விசும்புந்தொழவோங்கியிருள்வருடை
பலகுதிக்குந்தொறுந்தேன்பாயுஞ்சோலைப்பருப்பதமே. (௭௪)

பருப்பதந்தாமன்னிநிற்பதுபாற்கடல்பள்ளிகொள்வ
திருப்பதந்தாமம்பண்டிப்போதெலாமிளஞாயிறன்ன
உருப்பதந்தாமதர்க்கியோமலன்பர்க்குதவழகர்
திருப்பதந்தாமரைபோல்வாருகப்பதென்சிந்தனையே. (௭௫)

சிந்திக்கலாரங்கொழிக்குந்திருச்சிலம்பாற்றழகும்
பந்திக்கலாபமயிலாடுஞ்சாரலும்பங்கயனோ
டந்திக்கலாமதியாற்கரியாருறையான்பொருப்பும்
வந்திக்கலாமெனிற்சந்திக்கலாமுயர்வைகுந்தமே. (எசு)

வைதாளையுமுன்மலைந்தாளையுமலர்த்தாளில்வைத்தாய்
மொய்தாளையத்தனைத்திங்கிழைத்தேனையுமுதுலகில்
பெய்தாளைவாளிற்புரப்பாளிடபப்பெருங்கிரியாய்
கொய்தாளைவேய்ந்ததிருவடிக்கீழ்த்தொண்டுகொண்டருளே. ()

கொண்டமருந்தங்கடைவாய்வழியுகக்கோழைவந்து
கண்டமருந்துயராம்போதுன்பாதங்கருதறியேன்
வண்டமருந்துளவோனேதென்சோலைமலைக்கரசே
அண்டமருந்தும்பிரானேயின்றேயுன்னடைக்கலமே. (எஅ)

அடைக்கலந்தானேயிரந்தாள்புகலவவள்பொருட்டால்
படைக்கலந்தானைத்தருமன்கெடாமல்வெம்பாரதப்போ
ரிடைக்கலந்தானையலங்காரனைச்சரணென்றடைந்தேன்
முடைக்கலந்தானையுமப்போதயர்ப்பினுமுத்தியுண்டே. (எகூ)

உண்டிறக்கும்புவனங்களைமீளவுமிழ்ந்திலையேல்
பண்டிறக்கும்பதுமத்தோன்புரந்தரன்பைந்தழல்போல்
கண்டிறக்குஞ்சங்கரன்முதலோர்களைக்கண்டவரார்
திண்டிறக்குஞ்சரஞ்சேர்சோலைமாமலைச்சீதரனே. (அ0)

சேரரிதாழ்பொழின்மாலிருஞ்சோலையிற்செல்வர்செங்கண்
போரரிதாள்புனைதாரரிதாகிற்றன்பூந்துளவின்
தாரரிதாவுந்தழையரிதாகிற்றழைதொடுத்த
நாரரிதாகிற்பிழைப்பரிதாமெங்கணன்னுதற்கே. (அக)

நன்னுதலைப்பணிபூண்மார்பில்வைத்துவிண்ணாட்டிருப்பார்
மின்னுதலைப்பணிமேற்றுயில்வார்விடைவெற்பினிற்பார்

மன்றுதலைப்பணியன்பரைவைக்குமலரடிக்கீழ்த்
தன்றுதலைப்பணிசெய்வதென்ஞான்றென்றுயர்தொலைந்தே. ()

தொலைந்தானையோதந்தொலையானையன்னைசொல்லான்மகுடம்
கலைந்தானைஞானக்கலையானையாய்ச்சிகலைந்தொட்டிலோ
டலைந்தானைப்பாலினலையானைவானன்கையற்றுவிழ
மலைந்தானைச்சோலைமலையானைவாழ்த்தென்மடநெஞ்சமே. ()

நெஞ்சிலம்பாற்றமுடியாதுவேளெய்துநீளிரவும்
துஞ்சிலம்பாற்றுளியுந்நஞ்சமாஞ்சொரிகன்மழையை
அஞ்சிலம்பாற்றடுத்தாரலங்காரரடிவிளக்கும்
செஞ்சிலம்பாற்றருகேகிடத்திருயிர்தேற்றுதற்கே. (அச)

தேற்றுவித்தாற்புனறேற்றுநர்போற்றிருவெட்டெழுத்தால்
மாற்றுவித்தானென்மயக்கமெல்லாமண்ணும்விண்ணுமுய்யப்
போற்றுவித்தாரப்புயவலங்காரன்பொன்மேருவைப்போல்
தோற்றுவித்தாரணியுஞ்சுந்தரத்திருத்தோளண்ணலே. (அரு)

அண்ணலைவான்மதிதோய்சோலைமாமலையச்சுதனைத்
தண்ணலைவானவனைத்தெய்வநாதனைத்தாளடைவான்
எண்ணலைவான்பகையாமைவரோடிசைந்தின்னமுடற்
புண்ணலைவானென்னிருப்மனமேயுன்புலமைநன்றே. (அசு)

புலமையிலேநிமிர்ந்தப்பரைப்போற்றிப்பொதுமகளைக்
குலமையிலேகுயிலேகொடியேயென்றுங்கூர்விழியாம்
பலமையிலேயென்றும்பாடாமற்பாடுமின்பாவலர்காள்
நலமையிலேய்முத்தமார்சோலைமாமலைநம்பனையே. (அள)

நம்பிநின்றேனுன்சரணாரவிந்தத்தைநன்னெஞ்சென்னும்
செம்பிநின்றேபொறித்தேனுனக்காளென்றுதெய்வக்குழாம்
டம்பிநின்றேசெறிக்கும்பதங்காணப்பதறுகின்றேன்
கொம்பிநின்றேன்சொரியுஞ்சோலைமாமலைக்கொற்றவனே. ()

கொற்றவிராவணன்பொன்முடிவீழக்கொடுங்கண்டுஞ்சல்
உற்றவிராவணன்மாளவெய்தோனென்பரதனுக்குச்
சொற்றவிராவணன்மாலிருஞ்சோலைதொழுதுவினை
முற்றவிராவணனற்றமிழ்மாலைமொழிந்தனனே. (அக)

மொழித்தத்தைகொஞ்சுமலையலங்காரன்முன்னூற்றுவரை
அழித்தத்தைமைந்தர்க்கரசளித்தோனடிநாட்டொடர்ந்தென்
னழித்தத்தைச்செய்தந்திப்போகாவினையையொருநொடியிற்
கழித்தத்தையென்சொல்லுகேன்றனக்காட்பட்டகாலத்திலே. ()

காலமலைக்கும்புவனங்களைக்கரந்தாயுதிரம்
காலமலைக்குமைந்தாயழகாசமலத்துப்பஞ்சார்
காலமலைக்கும்புவிக்குமன்பாவுயிர்காயம்விடுங்
காலமலைக்குங்கடுங்கூற்றைக்காய்ந்தென்னைக்காத்தருளே. ()

அருளக்கொடியிடைப்பூமாதுநீயும்வந்தாளினுமாம்
இருளக்கொடியநமன்வருங்காலத்திகழினுமாம்
கருளக்கொடியழகாவலங்காரவன்கஞ்சனெஞ்சத்
துருளக்கொடியவுதைத்தாயெனதுயிருன்னுயிரே. (கஉ)

உயிர்க்கும்படிக்குமுன்னுயிரம்பேரொன்றுறுத்தன்னைமார்
செயிர்க்கும்படிக்குநின்றேனென்செய்கேன்செழுந்தேவர்களும்
அயிர்க்கும்படிக்குறளாமழகாவலங்காரநெய்க்கும்
தயிர்க்கும்படிக்குஞ் செவ்வாய்மலர்ந்தாய் நின்னைத்தாள்பணிந்
[தே. (கங)

பணிபதிவாடநின்றுடினநூற்றுவர்பாற்சென்றன
பணிபதினலுபுவனமுந்தாயினபாப்பதின்மர்
பணிபதியெங்குமுவந்தனபங்கயப்பாவையுடன்
பணிபதிமார்பனலங்காரன்பொற்றிருப்பாதங்களே. (கச)

பாதகரத்தனைபேருங்கனகனும்பன்னகத்தா
லேதகரத்தனையற்கருளாளியையெட்டெழுத்தின்

ஒதகரத்தனைச்சுந்தரத்தோளுடையானைநவ
நீதகரத்தனைச்சேர்ந்தார்க்குத்தேவருநேரல்லரே. (கரு)

அல்லலங்காமையுஞ்சேர்விக்குமைம்புலவாசையென்றும்
பல்லலங்கானைத்துகோளூன்றியும்பற்றறுதகண்டாய்
மல்லலங்காரிகையார்மருமார்ந்துவணங்குநெஞ்சே
தொல்லலங்காரனைத்தென்திருமாலிருஞ்சோலையிலே. (கசு)

சோலையிலாமையில்சேர்திருமாலிருஞ்சோலையினான்
வேலையிலாமையில்வேடங்கொண்டான்புயமேவப்பெருச்
சேலையிலாமையிலக்குகன்னாளவன்றெய்வத்துழாய்
மாலையிலாமையில்மாலையுற்றாளந்திமாலையிலே. (கஎ)

மாலைக்கரும்புசிறுகால்துகைக்கவருந்துமெங்கள்
ஆலைக்கரும்புதன்னாசையெல்லாஞ்சொல்லிலாயிரந்தோட்
டோலைக்கரும்புன்றொடமுடமாமதியூர்குடுமிச்
சோலைக்கரும்புயலேயருளாயுன்றுளவிளையே. (கஅ)

துளவிலையார்பொன்னடிமுடிசூட்டித்தொண்டாக்கியென்னை
வளவிலையாக்கொண்டநீகைவிடேன்மங்கலகுணங்கள்
அளவிலையாவலங்காரசமயிகளாய்த்தவன்னம்
உளவிலையாயுருவாயருவாயவொருமுதலே. (கக)

ஒருபாலமரரோருபான்முனிவருடனிருந்தென்
இருபார்வையுங்கொள்வெப்பதென்றேவிடபக்கிரிக்கும்
பொருபாற்கடற்குமயோத்திக்கும்பொற்றுவராபதிக்கும்
திருபாவைகுந்தமுநீவிற்றிருக்கின்றநீர்மையுமே. (க00)

---

அலங்காரருக்குப்பரமச்சுவாமிக்கழகருக்குக்
கலங்காப்பெருநகரங்[illegible]வா[illegible]ருத்தன்பினூல்
கலங்காதசொற்[illegible]தி[illegible]ப்பாடப்பட்டன்
விலங்காதசி[illegible]த்திருமணவாளதாசன்விளம்பி[illegible]. (க0க)



முற்றிற்று.